ல் ஆறிவின்றிச்சடமாய்க்கிடப்பதனாலும் (உணரும்புல ன்களொழிவால் (ஞானேந்திரியங்களைநீங்கி யிருப்பதனா லும் (பிராணனுமன்று) பிராணவாயுவும் ஆத்மாவல்ல அன்று (அந்தப்பிராணவாயுவு நனவாதி துரியாந்தம் இய ங்குவானேனென்னில் சேனைசூழ் நகர்வலஞ் செய்பொ ழுது மன்னையொழியாது) அரசன்நகர் வலம் வரும்போ ழ்து அவனை நீங்காமல்சேனைகள் சூழ்ந்து வருதல்போ ல் கருவிகரணாதிகள் சூழ்ந்துநிற்கஜாக்ர ஸ்வப்நசுழுத் திகளில் ஆத்மாசஞ்சரிக்கிற காலத்தில் இந்த ஆத்மாவை அந்தவாய்வு நீங்காமல் துரியம்வரைக்கும்இருக்கும்-எ-று.

அ-கை. சுழுத்தியில் பிராணவாயு இயங்குதற்குக் காரணம் அருளிச்செய்கின்றார்,

கசி. கரணமொடுங்கவாயுநிகழ்தவன்கொலென்னி
னுடல்காவலாகு மிலதேல்
மரணமடைந்ததென்று தமர்சுட்டிடார்முன்
வளைவாயின் ஞானிகொளுமே.

க-து. கருவிகளொடுங்கக் காலியங்கா விடில்
எரியிடுவாரென் றியங்கிய தென்றது.

இ-ள். (கரணமொடுங்க வாயுநிகழ்வென்கொலென்னி ல்) கருவிகரணங்களெல்லாம் அடங்கிநிற்கப்பட்ட சுழு த்தியில் பிராணவாயுமாத்திரம் உசுவாஸ நிசுவாசமாய்ந டந்துகொண்டிருக்கின்றது என்னெனில் (உடல்காவலா கும்) சுழுத்தியில் தேகத்திற்குக்காவலாகவிருக்கும் (இ லதேல்) அப்படி உசுவாசநிசுவ சமாகக் காத்துக்கொள் ளாமல் நீங்கியிருக்குமானால் (மரணமடைந்ததென்று த மர்சுட்டிடாமுன்) இறந்துபோய்விட்டதென்று உரியசு ற்றத்தார் தகனம்பண்ணுவதற்குமுன்னமே (வளைவாயி

ன்ஞானிகொளுமே) விளைந்த வாவினையுடையநாய்கள் ஆ காரமாகக்கொள்ளுமென்று உடலைக்காத்திருக்கின்றது. எ-று.

௫௨

அ-கை. மெய்ப்பிராணவாயு நீயன்றென் றுரைத்தருள ஆந்தக் கரணமோ நானென்ற மாணாக்கனைநோக்கி அந்தக்கரணமும் நீயன்றென்றருளிச் செய்கிறார்.

கலி. இனமுறவென்ன வுள்ளகரணத்தி லொன்றி
தெனலாவி தென்னுதெனதால்
மனமுன மன்னமென்றவதனாலுமல்ல
மதியல்ல வந்தவகையே.

க-து. கனமிக்குமந்தக்கரணத்திலாகும்
மனம்புத்தியன்று நீயென் றறிவித்தது.

இ-ள். (மனம்) மனமானது (இனமுறமென்னவுள் க ரணத்தி லொன்றிதெனலால்) தத்துவங்களுக்கினமாகிய உறவென்று சொல்லவிருக்கின்ற அந்தக்கரணத்தி லொ ன்றாகியது இந்த மனமென்பதனாலேயும் (இனதென்னு தெனலால்) இந்த தேகாதிபிரவஞ்சத்தை என்னுதென் பதனாலேயும் (முனமனமென்றவதனாலும்) முன்பேஅன் னத்தின் பாகமென்று சென்னதினாலும் (அல்ல) நீயல் ல ஆகில் புத்திகாணுமென்றுசொல்லுவாயானல் (மதியல் ல அந்தவகையே அதுபோலவே புத்தியுநீயல்ல-எ-று.

கலி. இடரின்புளதா நிலையற்றறிவற்
றெண்ணுங்கரணங் களிலாயெவரும்
அடரும்பிறவிக் கடியென்றவரு
மகங்காரமுநீயல வென்றறியேன்.

க-து. அகங்காரமுதான வறிவிலாத் துற்குண
அகங்காரமு நீயன்றென் றறைந்தது.

இ-ள். (அகங்காரமூகீயல) அகங்காரமூகீயன்று என்னதென்றால் இடரின்புளதாய்) துன்பத்தையேயின்பமாகவுடையதாய் (நிலையற்று நிலைபெற்ற குணமிலாததாய் அறிவற்று) அறிவிலாததாய் (எண்ணுங்கரணங்களிலாய் எண்ணப்பட்ட கரணநான்குள் இதுவுமொன்றாகி எவரும்) யாவரும் (அடரும்பிறவிக்கடியென்றுவருமென்றறியே) நெருங்கவந்து சனிக்குஞ்சனனத்திற்கு ஆதிகாரணன்றுவருகின்றதென்றறிவாய்-எ-று. (ருச)

கலி. ஐயப்படலோர் பொருணிச்சயமாய்
அறியப்படல் யானெனதென்றும்தம்
செய்யப்படல் செய்வது சிந்தனையாம்
சித்தம்மதுவன்றென நீதெளியே.

க-து. மித்தையை யானென தென்ற விகாரமாம்
சித்தமுமன்றெனத் தெளியவுரைக்கது.

இ-ள். (ஓர்பொருணிச்சயமாயறியப்படலையப்படல்) ஒருபதார்த்தத்தை மெய்யெனவறிதலும் அதில்சந்தேகப்படுதலும் (யானெனதென்று மதஞ்செய்யப்படல்) யானென்றும் என்னதென்றும் எவற்றிலுஞ் செருக்கையுண்டாக்குதலும் (செய்வது சிந்தனையாம்) இவைகளைச்செய்விக்குஞ் சிந்தனையாகிய சித்தம்மதுவன்றென நீதெளியே) சித்தமானது நீயல்லவென்று அறிவாய்-எ-று. (ருரு)

அ-கை. பஞ்சபூதவிகாரமாகிய தேகமுதல் சித்தபரியந்தமும் நீயல்லவென்றவர் நின்னதன்றென்பதையுமேலருளிச்செய்கின்றார்.

கலி. மூன்றாகவுடம்பது சித்தமதேமுடிவாக
மொழிந்த பொருட்டிரடான்

நின்றாகிலநீ யறியும்பொருளாய்
நிகழ்கின்றதன்று லெனநின்மலனே.

க-ரை. தனுகாதி சகலமுமோர்ந்து
நினைவரலறிவது நினதலவென்றது.

இ-ள். (உடம்பதுமுன்னாக சித்தமதேமுடிவாக) உடலினைக் குறித்துச் சொன்னஎனதாடைபொன்பூவென்ற செய்யுள்முதலாக சித்தத்தைக்குறித்து முடிவிலேசொன்னஐயப்படலென்ற செய்யுளீறாகபதினாறு செய்யுளினாலேயும் (மொழிந்தபொருட்டிடமான்) சொல்லிக்கொண்டுவந்த அர்த்த சமுகங்களெல்லாம (நீயறியும் பொருளாய்நிகழ்கின்றதனால்) உன்னாலேயறியப்பட்டபதார்த்தமாய் விளங்குகையினாலே (நின்றாகிலவெனநின்மலன்) அறிவுமயமாய் விளங்குகின்ற ஆத்மாவாகிய வுன்னதல்ல வென்றார் மலரகிதரானநந்திபாராயணமுனிவர்-எ-று. ருசு

அ-கை. தனுகரணாதிக ணீயுமன்று நின்னதுமன்றென்ற ஆசாரியரைநோக்கி மாணாக்கன்விண்ணப்பஞ்செய்வதை மேலருளிச்செய்கின்றார்.

சவி. உனனாலறியப்படும்யாவையுமுன்
னுயிரன்றெனவோ தினையொக்குமெனச்
கென்னாலறியா தொழியும்பொருளோ
யானாகுவதென்றன னென்றலுமே.

க-ரை. நீயறியும்பொரு ணீயலவென்றனை
நாயேகொத்தது நானென்றது.

இ-ள். (உன்னாலறியப்படும் யாவையும் முன்னுயிரன்றெனவோதினை) உன்னாலே பகுத்தறியப்பட்டவையாவும் உன்னுயிரல்லவென்று தேவரீர்திருவாய்மலர்ந்தருளினீர் (எனக்கொக்கும்) அவை அடியேனுக்குச் சமாதானமாக

விருக்கின்றது ஆனால் என்னாலறிய தொழியும்பொருளோ யனாகுவதென்றனன் என்னாலே யறிதற்கரிதாகியபொருளோ (நானாகின்றதென்றனன் என்றலுமே) இப்படிசொல்லவே மாணாக்கனைநோக்கிமேலருளிச்செய்கின்றார்-எ-று

அ-கை. காரியகாரண மித்தன்மையுடையதென்பதை மேலருளிச்செய்கின்றார்.

கஙி. அரியாப்பொருள்காரணமாகைகுறித்
தரியும்பொருள் காரியமாமுலகில்
நெரியாற்றிகழ் நான்மறையர்தமெலாம்
நீயன்றெனவோது நிரந்தரமே.

க-து. காரியமன்றுநீ காரணமாமென
ஆரியன்மகிழ்வோ டடிமைக்குரைத்து

இ-ள். (உலகிற்குறிக்கரியாப்பொருள் காரணமாகை) உலகத்தினிடத்திலே ஒரு சுட்டுதலினால் அறிவதற்கு அரிதாகிய பொருளானது காரமணமாகுதல்-அவையெவையெனில் மூலகாரணமானபிரமம் (உலகிற்குறித்தரியும் பொருள்காரியமாம்) உலகத்தினிடத்திலே மதித்தறிகின்ற பொருளானது காரியமாகுதல்அஃதெவை யெனில் தேகாதிப்ரவஞ்சம் ஆகையால்(நெரியாற்றிகழ் நான்மறையுந்தமெலாநிரந்தரநீயன்றெனவோது) நன்மார்க்கத்தாற் பிரகாசம் பொருந்தியநான்குவேதத்தின் முடிவுகளெல்லாம் எப்பொழுதுந்தேகாதிப்ரவஞ்சமான காரியமாகுதலே நீயன்றென்றுசொல்லுகின்றது-எ-று—உலகுருரித்த என்பதைஇரண்டிடத்துங்கூட்டுக. ௬அ

அ-கை. பிரமசைதன்னியத்தைக் கட்புலனாலறியத்தக்கதன்றென்று மேலருளிச் செய்கின்றார்.

கலி. அறியும்பொருளன் றறியாப்பொருளன்
றறிவாகிய நீயெனு மப்பொருடான்
பொறியின்வழிநின் றறியும்பொருளோ
போதக்கண்விழித் தறியும்பொருளே.

க-து. ஊனநோக்கத்தி னுணர்ந்தறியாப்பொருள்
ஞானநோக்கத்திற் காடுவதென்றது.

இ-ள். (நீயென்னும் அறிவாகிய வப்பொருடான்) நீயென்றுசொல்லபட்ட அறிவாகிய அந்தப் பொருளானது— (பொறியின்வழி நின்றறியும் பொருளோ அறியும்பொருளன்று) சுரோத்ராதி ஞானப்பொறியின்வழியாக நின்றறிகின்றபொருளா-அறிகின்றபொருளல்ல (போதக்கண்விழித் தறியாப்பொருளன்றறியும்பொருள்) ஞானக்கண்ணைவிழித்தறியாதபொருளல்ல அறிகின்றபொருள்-எ-று— (இதற்குப்பிரமாணம்- திருமந்திரம்) முகத்துக்கண்கொண்டுபார்க்கின்றமூடர்காள்- அகத்துக்கண்கொண்டு பார்ப்பதேயானந்தம் மகட்குத்தாயார் மணாளனோடாடிய சுகத்தைச்சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே என்பதனுங் காண்க. ருசு

அ-கை. ஞானக்கண்ணாலறியும்பொருள் யாதென்றுமாணாக்கன் வினவவாக்கியார்த்தத்தைக் குறிப்பா யருளிச் செய்கின்றார்.

கலி. வேதப்பொருடா னிதுவேறுசொல்லும்
வினையாவையு மன்றொருவேறுமிலாய்
போதப்பொரு டந்தமறைக்கணியாம்
புனிதப்பொரு டத்வமசிப்பொருளே.

க-து. அத்வைதசாம வாரணைமுடிவாருஞ்
சுத்தநற்றத்வமசிப் பொருளென்றது

இ-ள். (வேதப்பொருடானிது) வேதஞ்சொல்லப்பட்ட அர்த்தமெல்லாமிது (வேறுசொலும் வினையாவையுமன்று) இதையன்றி வேற்றுமையாகச் சொல்லப்பட்ட கருத்துகளெல்லாமன்று (ஒருவேறுமிலாப்போதப்பொருடந்த மறைக்கணியாம்) ஒன்றேனும்போதமில்லாத அபேதஞானார்த்தத்தைத் தரப்பட்டசாமவேதத்திற்கு ஆபரணம்போன்ற (புனிதப்பொருடத்வமசிப்பொருளே) சுத்தார்த்தமான தத்வமசியென்னுமகாவாக்கியார்த்தம்-எ-று. வேதப் பொருடந்தமறைக்காணியா மென்றமையால் சாமவேதமென்றுபொருட்படுத்த லாயிற்று. ௬௰

அ-கை. திரிபதார்த்தையும் விகசிதமாக விரித்தருளிச்செய்கின்றார்.

கலி, நிமலமாம்பர மதுவெனும்பொரு
ணீயெனும்பொருள் சீவனே
மலமான விண்டயிக்கிய
மசிபதப்பொருளாவதே.

க-ஞ. தம்பதந்தொம்பதந் தானது நீயெனும்
இம்பரில்சிபதமேகமென் றுரைத்தது.

இ-ள். (அதுவெனும்பொருணிமலமாம்பரம்) அதுவென்னும் அர்த்தமானது மலரகிதமான பிரமம் அதுதத்பதம் (நீயெனும்பொருள் சீவன்) நீயென்னும்அர்த்தமானது சீவன் இதுத்வம்பதம் அசிபதப்பொருளாவது (அமலமான விரண்டயிக்கியம்) அசிபதப்பொருள் அர்த்தமானது மலரகிதமாகிய சீவேஸ்வராளிரண்டும் ஏகமாகின்றது இது அசிபதம் எ-று— அது நீயாமென்பதற்குகாரணம்) (ஒழிவிலொடுக்கம்) உனையுணர்த்திப்பாச முதலியுடையோன்- றனையுணர்த்தில் நீயே தலமாக் - கனலே- விறலிடமாக்காணிலதன்

வெம்மையை வெருக்கி - அறியகிலாப்போலது நீயாமென்பதனுற்காண்க கூஅ

அ-கை ஆசாரியரை மாணாக்கன் வணங்கி சிவனும் பிரமமும்எப்படி ஐக்கியங் கூடுமென்று வினவுகின்றதை அருளிச்செய்கின்றார்

கவி அருமையாகிய பிரமமுன்னிலை
யாகுமாருயிர் பின்னிலை
இருமையாகு மிரண்டையிக்கிய
மெய்துமாறெவ னென்னவே.

க - து. பிரமமுன்னிடம் பின்னிடமாருயிர்
இருபதமொன்று வதெப்படியென்றது

இ-ள். (அருமையாகியபிரமமுன்னிலை யாகும்) பெருமையினையுள்ள பிரமம்முதன்மையான இடமாயிருக்கின்றது (ஆருயிர்பின்னிலை பலரிடத்தும் விகுதியா யிருக்கின்றசீவன் கடையாகிய பின்னிடமா யிருக்கின்றது) இருமையாகுமிரண்டையிக்கிய மெய்துமாறெவனென்னவே அம்மை யிம்மையாகிய இரண்டிடத்திலுமிருக்கின்ற பெருமைசிறுமைபொருந்திய பரமாத்மா சீவாத்மா வென்னும் இரண்டையும் இரண்டறப் பொருந்துவதை யெப்படியென்றுமாணாக்கன் கேட்க ஆசாரியர் விடையருள ஆரம்பித்தனரென்றவாறு.

அ-கை. சீவேஸ்வரானுக்கு உபாதிகளால்பேதமென்று மேலருளிச்செய்கின்றார்,

கவி உபாதியால்வருபேதமேயிவர்
பேதமொன்றுமுயிர்க்குநுங்
கபாதியாமுடல்போலிறைக்குள
காரணாதிகள் காயமே.

க - து. காரியவுடலுயிர்க் கடைதுபோலவே
காரணவுடலுள விசற்குமென்றது

இ-ள். (உபாதியால்வரூபேதமேயிவர்பேதம்) ஜீவேஸ்வரானுக்குஉபாதியினாலே வரப்பட்டபேதமேயன்றி இவர்கள்பேதமன்றாம். அதெப்படியெனில் (ஒன்றுமுயிர்க்குறுங்கபாதிபா முடல்போல்) ஓராதாரத்தைப்பற்றிநிற்கும ஆத்மாவுக்குப் பொருந்திய கபமாதியாகச் சொல்லப்பட்டஉடலைப்போல (இறைக்குள காரணாதி காயங்கள்) ஈஸ்வரனுக்கும்உண்டு காரணமாகியஉடல் எ-று. சீவனுக்குஉபாதியாகிய உடலெவையெனில் தேகம்- இந்திரியம்-மனம்புந்தி-அகங்காரம்-சித்தம்-பிராணவாயு - ஆகியவேழில்- தேகமாவது ஞானேந்திரியமான ஸ்ரோத்ராதி ௫ இவற்றின்விஷயமான சப்தாதி-௫-ஆகிய இவைதேகம்-க-இந்திரியமாவது-கன்மேந்திரியமானவாக்காதி-௫-இவற்றின்விஷயமானவசனாதி-௫-ஆகியஇவை யிந்திரியம்க அந்தக்கரணம்-ச-பிராணவாயு -க-ஆக-எ-ம் சீவோபாதி எழினைவதிக—கபம்-பித்தம்-வாதம் • இந்நோய்க்குரிய தேகமாகையால் கபாதியாமுடலென்றார்.

அ-ளை. மேல் ஈஸ்வரோபதியை அருளிச்செய்கின்றார்,

கவி ஈசன்மூற்றறிவாற்வியாபி
எனைக்குமேது வியம்புமா
காசகன்னிருபாதிபாவனே
காரணாதிக னாவதே

க - வு. ஆகிஈசனிற்பாவனமீறகா
வோதியபரனுக்குபாதியேழுனைத்தது,

இ-ள். (காரணாதிகளாவது ஈஸ்வரனுக்குரிய காரணவுபாதிகள் ஏழாவன - ஸர்வஞ்ஞத்வம் - ஸர்வகாரணத்வம் ஸர்வாந்தரியாமித்வம் - ஸர்வேஸ்வரத்வம் ஸர்வசிருஷ்டித்வம்-ஸர்வஸ்திதித்வம்-ஸர்வஸம்ஹாரத்வம் ஆ

ப்தத்து மசுத்தசுத்த முனைத்துமே முதன்மையாகின்ற தத்பதார்த்தமான அதுவென்ற ஈஸ்வரனிடத்தும் இருக்கின்ற அசுத்தத்தையுஞ் சுத்தத்தையுஞ் சொல்லுகின்றோம்.-எ-று. சுஙி

அ-கை மேல்ஜீவஅசுத்த சுத்தங்களை அருளிச்செய்கின்றார்.

கவி, ஆகமுன்றிகமேழுநானெனல்
த்வம்பதத்தி லசுத்தமே
சோகமின்றிய சான்றுநானெனல்
த்வம்பதப்பொருள்சுத்தமே.

க-து. காக்ஷிப்படாது நானென்றகசுத்தமும்
சாக்ஷியேசுத்தந் தானுயிர்க்கென்றது.

இ-ள், (ஆகமுன்றிகமேழுநானெனல் த்வம்பதத்திலசுத்தமே) முன்னெறியச்சொன்ன தேக முதலிய வுபாதியேழையுநானென்று அபிமானிக்கிருத்தல்த்வம்பதமானசீவனுக்கு அசுத்தம் சோகமின்றிசான்று நானெனல் த்வமபதப்பொருள்சுத்தமே) முன்சொன்னதேக முதலியவுபாதிகேழையும் நீங்கிஅந்தமயக்கமில்லாமல்நாம்சாக்ஷியென்றுகாணல் த்வம்பதார்த்தமாகிய நீயென்ற சீவனுக்குசுத்தம்-எ-று. சுங

அ-கை. மேல்ஈஸ்வர சுத்தாசுத்தங்களை அருளிச்செய்கின்றார்.

கவி. ஆகிலகாரண மேழுநானெனல்
தத்பதத்தி லசுத்தமே
சகலகாரண சான்றுநானெனல்
தத்பதப்பொருள் சுத்தமே.

க-து காரணகானென வீசர்க்கசுத்தமும்
ஆரணங்கரிய சுத்தமென்றறைந்தது,

இ-ள். (அகிலகாரணமேழும் காரணைபதத் பதத்தில சுத்தமே எல்லாவுலகத்திற்குங் காரணமாகின்ற ஏழுபாதியையுந் தானாய்க்கொண்டிருந்த காலந்தத்பதப்பொருளாகின்ற ஈஸ்வரனுக்கு அசுத்தமாகின்றது சகல காரணசானுநானெனல் தத்பதப்பொருள்சுத்தமே)ஏழுபாதியையுநீங்கி எல்லாக்காரணத்திற்குஞ் சாக்ஷிதானாயிருந்தகாலந் தத்பதப்பொருளானஈஸ்வரனுக்கு சுத்தமாகின்றது-எ-று.

கஎ

அ-கை மேல்அஸிபதார்த்தமிஃதென அருளிச்செய்கின்றார்.

கலி. செறிந்தகாரண காரியங்கள்
சிதைந்துமேலுறுசித்ததாய்
அறிந்தவாதனை தானுமற்றது
அசிபதப்பொருளாவதே

க அ இதுவைதுவபாகியற்றேகமேநாமெனும்
அதைமறந்ததுவே அஸிபதமென்றது

இ-ள், (செறிந்தகாரணகாரியங்கள்)சிதைந்துமேலுறு சித்ததாய்நெருங்கிய காரணஉபாதி காரியஉபாதிகள்கழிந்துமுடிவிற்பொருந்திய சித்தேகநாமென்று (அறிந்தவாதனை தானுமற்றது அசிபதப்பொருளாவதே) அறிகின்சிவ அறிவானதானுமில்லாமல் அதுவாகின்றதே அசிபதத்திற்கர்த்தமாகின்றது.

கஅ

அ-கை, மேல்முக்கிய லக்ஷியார்த்தங்களை அருளிச்செய்கின்றார்.

கலி, அசுத்தமாகிய திருபதத்தினு
முக்கியப் பொருளாவதே
விசுத்தமான இலக்கியப்பொரு
ளென்றுசொல்லுவர்விமலரே,

க - கூ, சுத்தமற்றிருக்கின் முக்யமிரண்டினும்
சுத்தமுற்றிருப்ப இலக்கியமென்றது,

இ-ள். (அசுத்தமாகியதிரு பதத்தினுமுக்கியப் பொருளாவதே) அசுத்தமாகின்றது தத்பதம்-த்வம்பதம் இவ்விரண்டினு மிருந்தபோதுமுக்கியப்பொருளென்றும்) விசுத்தமான திலக்கியப் பொருளென்று சொல்லுவர் விமலரே) சுத்தமாகின்றது தத்பதம்த்வம்பதம் இவ்விரண்டினுமிருந்தபோது லக்ஷியப்பொருளென்று சொல்லுவார் மலாதிகாரகிய பெரியோர்கள்-எ-று.—இதன்றாற் பரியம் - ஜீவேஸ்வரஸ்வரூபம்- உபாதியுடன் சம்பந்தித்து நின்றபோது முக்கியமென்றும்உபாதியைப் பிரிந்தபோது லக்ஷியமென்று- உபாதியை நானென்றபோது அசுத்தமென்றும் உபாதிக்குசாக்ஷியானபோது சுத்தமென்றுஞ் சொல்லியதாம். ௬௯

அ-கை, மேல்முக்கிய லக்ஷியார்த்தங்களை அருளிச்செய்கின்றார்.

கவி, முரண்டசிவ பரங்கடம்முடன்
முக்கியப் பொருளாவதே
இரண்டில்வேறு சிற்சொரூப
மிலக்கியப் பொருளாவதே.

௭௦ து, இரண்டுடலோடு மிருப்பதுமுக்கியம்
இரண்டுடலற்ற திலக்கியமென்றது,

இ-ள், முரண்டசிவ பரங்கடம்முடன் முக்கியப் பொருளாவதே) சிவபரங்கள்மாயபாடாகின்ற காரியகாரண உடலில் சம்பந்தித்துநின்றபோது முக்கியப் பொருளென்றும்இரண்டில்வேறு சிற்சொரூபமிலக்கியப் பொருளாவதே) இவ்விரண்டுபாதியையுமநீங்கிசாக்ஷியாய் நின்றபோது லக்ஷியப்பொருளென்றுஞ் சொல்லப்படுகின்றது என்றவாறு, ௭௰

அ-கை-மேல் உபாதித்வய முந்நீக்கில் ஏகவஸ்து வாமென்பதை அருளிச்செய்கின்றார்

கவி- ஊக்கியப்பர சீவர்தங்க
ளுடம்பிரண்டு மிலக்கணா
வாக்கியப்படி நீக்கினாலொரு
வஸ்துவே பரவஸ்துவே,

க-து இலக்கணத்தாலுட லிரண்டையுநீக்கிடின்
அலக்கமாம் வஸ்துசொரூபமென்றென்றது

இ-ள் ஊக்கியப்பரசீவர்தங்களுடம் பிரண்டும் உயர்ச்சியையுடைய பரத்தினதுஉடலும் தாழ்மையையுடைய சீவனதுஉடலும் ஆகிய விரண்டையும் (இலக்கணவாக்கியப்படி நீக்கினால்) வேதஞ்சொல்லிய இலக்கணைக்கணவாக்கியப் பிரகாரம் விலக்கிப் பார்த்தால் (ஒருவஸ்துவே பரவஸ்துவே) இரண்டற்ற ஒருவஸ்து வாகியபிரமமாய்-என்று—உயர்ச்சி யென்றமையால் தாழ்வு வருவிக்கப்பட்டது.

எக

அ-கை- முன்சொன்ன இலக்கண மித்தனையென்பதை மேலருளிச்செய்கின்றார்.

கவி- ஓரில்விட்டதும் விட்டிடாததும்
உபயமும்மென வுணர்வுளோர்
தேரிலக்கணை திரிவிதத்தில்
இசைப்பர்மற்ற தியம்புவாம்.

க-து- விட்டதும் விடாததுமிரண்டு முரைத்துமேல்
விட்டுவிடாததும் விளம்புவோமென்றது,

இ-ள்- (ஓரில்விட்டதும் விட்டிடாதது முபயமும்மென) அவ்வகை ஆராய்ந்தறியுமிடத்து விட்டலக்கணை விடாதலக்கணை விட்டுவிடாதலக்கணை யென்றும் (உணர்வுளோர் தேரிலக்கணை திரிவிதத்திலிசைப்பர்) அறிவுடையோர்கள் வேதங்களை ஆராய்ந்து அதிலுள்ள லக்கணைவகை

க்கிய மூன்றுவிதமாகச் சொல்லுவார்கள் (மற்றதியம்புவா
ம் அதுகளைச் சொல்லுகின்றோம்-எ-று ௭௨

அ-கை முன்சொன்ன லக்ஷணைமூன்றினுள்விட்ட
லக்ஷணையை அருளிச்செய்கின்றார்

கவி- மஞ்சகூப்பிடுதென்றல்போலவும்
வடபகிரதி யுள்ளதே
விஞ்சுகோஷமதென்றல் போலவும்
விட்டலக்கணையாகுமே.

க - து கங்கையுமஞ்சமுங் கழறுமோவதுபோல்
அங்கமுனக்குவேறெமெனவுரைத்தது.

இ-ள்- (மஞ்சகூப்பிடு தென்றல் போலவும்)கட்டிலா
னது கூப்பிடுதென்றொருவன் சொல்லும் அர்த்தம்போ
லவும்(வடபகிரதியுள்ளதேவிஞ்சுகோஷமதென்றல்போ
லவும்)வடகங்கைக்கணுள்ளது இடைச்சேரியென்றொரு
வன்சொல்லும்அர்த்தம் போலவும் (விட்டலக்கணையாவா
திது- எ-று —[இதன்றாற்பரியம்] கட்டில்கூப்பிட்டதெ
ன்றும்கங்கைக்கணிடைச் சேரியுள்ளதென்றும் ஒருவன்
சொல்லுமிடத்து - மஞ்சமானது மரம்மரமானது கூப்பி
டுமோ - மஞ்சத்திலொருவனிருந்துகூப்பிட்டானென்று
கொள்ளவேண்டிற்று - கங்கையானது - ஜலம் - ஜலத்தி
லேஇடைச்சேரிஇருக்கமாட்டாது கங்கைக்கரையிலே
இடைச்சேரியிருக்கின்றதென்றுகொள்ளவேண்டிற்று -
இப்படிப்போலஸப்த உபாதிக்குஞ்சிவன் சாக்ஷியாயிரு
க்கின்றானென்றுகண்டறிவதாம்இது சமசர்க்கவாக்கியபா
கிய விட்டலக்ஷணையாம். ௭௩

அ-கை- மேல்விடாதலக்ஷணையையருளிச்செய்கி
ன்றார்.

க.ளென்று ஏகமாகக்காண்பது விட்டுவிடாதலக்கணைய
மென்றதாம்
௭

அ-கை- மேல்விட்டுவிடாதலக்கணையின்படி நீகொள்ளவேண்டிய தென்பதை அருளிச்செய்கின்றார்

கவி· விட்டலக்கணைதனையும்விட்டு
விடாதலக்கணை தனையுநீ
விட்டுவிட்டுவிடாதலக்கணை
யால்விளங்கு விளங்குவே

க - து முன்னிலக்கணைமுழுதையுநீக்கி
பின்னொருவிலக்கணை யருத்தமாகென்றது

இ-ள் (விட்டலக்கணை தனையும்விட்டு) கட்டில் கூப்பிடுமோ அதிலொருவிடமிருந்து கூப்பிடுகின்றானென்றும் கங்கைசத்திக்குமாகங்கைக்கரையிலிருக்கும் இடைச்சேரிசத்த மென்றறிவதுபோலும் எழுபாதிக்குஞ் சாக்ஷியாயிருந்தான் ஜீவனென்றறியச்செய்து (விட்டலக்கணையும் விட்டு விடாதலக்கணையும் விட்டு) சிவப்புநிற்கின்றது வெள்ளைபோகின்றதென்னில் சடமானதிறம் ஓடுமா நிற்குமா குதிரையைப் பசுவைப்பற்றிநிற்குமோ டு மென்றறிவது போலும் எழுதாதிக்குஞ் சாக்ஷியாயிறந்துபரமென்றறிவித்து விடாதலக்கணையும்விட்டு விடாலக்கணையால்விளங்கவே விளங்குமானக்கனே நீமுன் சொல்லியஇரண்டிலக்கணையின்பயனையும் விட்டுவிட்டுவிடாத லக்கணையினாலேபிரகாசமாகத்தெளிவாய்-எ-று—(இதன்றுற்பரியம்) தேவதத்தனானவன் இரண்டிடமும் இரண்டுகாலமும் நீக்கிப்பார்க்கில் ஒருதேவதத்தனேயானதுபோலகாரியஉபாதியையு

ம்காரணஉபாதியையும் நீக்கிப்பார்க்கில்பரிபூரணமாய்வி
ளங்குகிறபரமேநீயென்றறிவித்ததாம் எ-று

கலி- போதுமேவியதேயம்விட்டொரு
புருடனைக்கொளுமாறுபோல்
ஓதுமிருடல் கண்டுவிட்டதன்
உண்மைகாண வுணர்ந்திடே

க-து காலதேயம்விட்டவன்றனைக்காண்டல்போல்
தூலம்விட்டுண்மையைத்தொகுத்தறியென்றது

இ-ள், போதுமேவிய தேயம்விட்டொரு புருடனைக்
கொளுமாறுபோல்) அந்தக்காலம்இந்தக்காலமென்று
சொல்லுங்காலத்தையும்-அந்ததேயம்இந்ததேயமென்று
சொல்லுந்தேயத்தையும் - நீக்கிவிட்டு ஒருகேவலத்தனாகி
யபுருடனை அவன்தானிவனென்று அறிந்துகொள்ளுமவ
கைபோல(ஓதுமிருடல்கண்டுவிட்டதனுண்மை காண வு
ணர்ந்திடே) முன்சொன்னகாரியகாரண உடல் இரண்டை
யும்சடமென்று அறிந்துநீக்கி இரண்டிடத்துமிருந்தது ஒன்
றுதானென்று அதனுண்மையைக்கண்டறிந்துகொள்ளென

அ-கை- மேல் உபாதிகளை நீக்கி சாக்ஷியைக்கண்
டுகொள்ளென்பதை அருளிச்செய்கின்றார்

கலி. புரியாவுயிர் காரியமாமுடலும்
பிரமத்துறு காரணமாமுடலும்
கரியாகிய வாதனையுந்தவிரக்
காட்டிப்படிகண்டுகொள்கண்ணுறவே

க-து சனுவிருடலிரண்டையுநீத்துநீ
மாசறுசாக்ஷியின் வழிகாணென்றது

இ-ள்(உயிர்பிரியாக் காரியமாமுடலும) சீவனைவிட்டுப்
பிரியாதகாரிய வுபாதியென்னுந் தேகமும்(பிரமத்
துறுகாரணமாமுடலும்) பிரமத்தைப் பெ

ருந்தியகாரணவுபாதியென்னுந் தேகமும் (கரியாகிய வர்த்தனையுந் தவிரக்காட்டும்படி) சாட்சியாகிய வாசனை வுபாதியுநீங்கநாங்காண்பித்தபடியே (கண்டுகொள்கண்ணுறவே) அறிவினிடமாகப் பொருந்தக்கண்டுகொள்-எ-று

அ-கை. அந்தக்காரணங்க ளிருந்தாலும் நீங்கினாலும் சைதன்னியத்தை யறியக்கூடா தென்பதைமேலருளிச்செய்கின்றார்,

கலி. காரணத்திரணிற் பினுமப்பொருளைக்
காணக்கிடையாதவை யையறவே
மரணப்படி னும்மதுகண்டுகொளும்
வழியில்லையெனும் படிநீமதியே.

க - து. காரணங்களிற்பினுங் காண்டயரிதவை
மரணங்களாயினும் வழியில்லை யென்றது.

இ-ள், (காரணத்திரணிற்பினு மப்பொருளைக்காணக்கிடையாது) அந்தக்காரணக் கூட்டங்கள் அமது தெவுரவங்கெடாமனிற்கினும் அந்தப்பிரமத்தைக்காணபது அரிது அவையையறவே மரணப்படினும் மதுகண்டு கொளும் வழியில்லை) அவ்வந்தக்காரணங்கள் இறப்பினும் பிரமத்தைக்கண்டுகொள்வதற்கு மார்க்கமில்லை) எனும்படி நீமதியென்றபிரகாரத்தை யுனதுவிவேகத்தினாலே அறிந்துகொள்வாய் என்றவாறு — இதன்றாற்பரியம்) அந்தக்காரணமானது ஆதித்தன் சந்நிதியில் வைத்ததீபம் போல தெவுரவங்கெடினுந்தான் சைதன்னியத்தைப் பொருந்தலாமென்றது ஆதித்தனைப்போல அறிவுதீபம் போல அந்தக்காரணமெனவறிக. ௭௯

அ-கை, அவ்வாக்கிரத்தில் அந்தக்கரணாதிகள் வியாபிக்கின்றதை மேலருளிச்செய்கின்றார்.

அ-கை, சேவித்துநிற்கு மாணாக்கனுக்கு ஆசாரியர்
உளங்களிகூர்ந்து பிரமோபதேசஞ்செய்யும் பொருட்டு
பூர்ணாபிஷேகஞ்செய்ததை மேலருளிச் செய்கின்றார்,

கவி- தமரக்கலைக்களவுதெரிவற்ற தற்பொருளதனை யீ
குவான்- அமரர்க்களப்பரியபதநற்புனற்கொடு செய்தபி
ஷேகமே

க-து. தற்பொருளருள்குரு சிவஞானனுக்கு
நற்பதப்புனலபிஷேகமுஞவின்றது.

இ-ள். தமரக்கலைக்களவு தெரிவங்கலைக்கப்பட்டகலை
ஞானங்களினாளவிட்டறிதற்கரிய (தற்பொருளதனையீ
குவான்) அதுவென்னுமர்த்தமான வதனை அளித்தருளு
ம்பொருட்டு (அமரர்க்களப்பரியபதநற்புனற்கொடு) தே
வர்களுக்கும் அளவிடற்கரியமகிமைதங்கிய பாதோதக
த்தினாலே செய்தஅபிஷேகமேசிஷனுக்கு அபிஷேகஞ்
செய்தருளி-எ-று- அரு

அ-கை. ஆசாரியர்தனது சேஷமளித்து மாணாக்க
னுடற்பகைநீக்கியதை மேலருளிச்செய்கின்றார்-

கவி. பவளத்தில்வைத்தமுதினின் மிச்சிலிட்டினிய ப
ரிவோடுமாதவளப்பொடிக்கவசமெனவிட்டுடற்பகைகட
லைசாயவே

க-து- வெண்பொடியளித்தவன் வினைகணீங்கியபின்
உண்டதன்சேட முதவியதுரைத்தது.

இ-ள். (உடற்பகைகடலைசாய) உடற்பகைகளும் உயி
ர்ப்பகைகளும்உட்பகைகளும்நலைபெடாமல்நீக்கும்பொ
ருட்டு (மாதவளப்பொடிக் கவசமெனவிட்டு) பெருமை
யுந்தூய்மையுமுள்ள விபூதியினாலேகவசங்கரித்ததுபோ
லநாகல்முகம் தேகத்திற்றரித்து(பவளத்தில்வைத்தமு
தினினினிய) தமது அதரத்தில்வைத்த அமுதினை மிச்சி

அ-கை, சேவித்துநிற்கு மாணாக்கனுக்கு ஆசாரியர் உளங்களிகூர்ந்து பிரமோபதேசஞ்செய்யும் பொருட்டு பூர்ணாபிஷேகஞ்செய்ததை மேலருளிச் செய்கின்றார்,

கவி- தமரக்கலைக்களவுதெரிவற்ற தற்பொருளதனை யீ
குவான்- அமரர்க்களப்பரியபதநற்புனற்கொடு செய்தபி
ஷேகமே

க-து. தற்பொருளருள்குரு சசிவர்ணனுக்கு
நற்பதப்புனலபிஷேகமுநவின்றது.

இ-ள். தமரக்கலைக்களவு தெரிவங்கலுலிக்கப்பட்டகலை ஞானங்களினளவிட்டறிதற்கரிய (தற்பொருளதனையீகுவான்) அதுவென்னுமர்த்தமானவதனை அளிக்கருணையபொருட்டு (அமரர்க்களப்பரியபதநற்புனற்கொடு) தேவர்களுக்கும் அளவிடற்கரியமகிமைதங்கிய பாதோதகத்தினாலே செய்தஅபிஷேகமேசீஷனுக்கு அபிஷேகஞ் செய்தருளி-எ-று- அ௫

அ-கை. ஆசாரியர்தனது சேஷமளித்து மாணாக்கனுடற்பகைநீக்கியதை மேலருளிச்செய்கின்றார்-

கவி. பவளத்தில்லைவைத்தமுதினின் மிச்சிலிட்டினிய ப
ரிவோடுமாதவளப்பொடிக்கவசமெனவிட்டுடற்பகைகட
லைசாயவே

க-து- வெண்பொடியளித்தவன் வினைகணீங்கியபின்
உண்டதன்சேட முதவியதுரைத்தது.

இ-ள். (உடற்பகைகடலைசாய) உடற்பகைகளும் உயிர்ப்பகைகளும்உட்பகைகளும்தலைபெடாமல்நீங்கும்பொருட்டு (மாதவளப்பொடிக் கவசமெனவிட்டு) பெருமையுந்தூய்மையுமுள்ள விபூதியினாலேகவசஞ்செய்ததுபோலாதல்முதற் தேகத்திற்றரித்து(பவளத்தில்லைத்தமுதினினிய) தமதுஅதரத்தில்வைத்த அமுதினை மிசி

தாகிப(மிச்சில்பரிவோடியிட்டு) தமதுபரிகலசேஷத்தை
அன்புடனளித்தருளி-எ-று. உடற்பகைகளாவன-அனல்
சிதம்-அசனி புனல்-வாதம்-விஷம்-ஆயுதம்- மருந்து பசி
தாசம்-பிணி மூனிவருமை, உயிர்ப்பகைகளாவன- காம
ம்குரோதம்-லோபம்-மோகம்-மதம்-மாச்சரியம் - பயம்-
வெகுளி-உவமை-நினைப்பு-மறப்பு-உட்பகைகளாவன- உ
றக்கம்-நோய்-மரணம்-இவைகளெனவறிக. உடற்பகைக
ளொன்றதனால் உயிர்ப்பகை உட்பகைவருவிக்கப்பட்டன

ஆ-கை. மாணாக்கனுடல் பொருளாவி மூன்றையும்
கையேற்று தீக்ஷைசெய்வதை மேலருளிச் செய்கின்றார்.

சவி. உதகத்துடற்பொருளோடுயிர்க்கைக்கொடுச்சி
மிசையொருபோதோடே-பதகத்தலத்தைவிட விருகை
த்தலத்தொடிருபதமேவவே.

க - ஞா. உடல்பொருளாவி யுதகமோடக்ஷயின்
இடபகந்தலையிற் கைதீக்கையெய்தென்று

இ-ள்(உதகத்துடற் பொருளோடுயிர்க்கைக் கொடுமா
ணாக்கனாகிய சிவஞானன் உதகசஹிதமாயுடல் பொருளா
விமூன்றனையுந் தத்தஞ்செய்ய அதைஆசாரியர்கைக்கொ
ண்டு(உச்சிமிசையொருபோதொடேபதகைத்தலத்தை
விட)உத்தமாங்கத்தின்மீது ஒருபுஷ்பசஹிதமாய் அமுகு
தையமான தமதுகைத்தலத்தை வைத்து அந்தீக்ஷை
செய்ய(இருகைத்தலத்தோடிருபதமேவ) சிஷன் தனதி
ருகைகளிலும் ஆசாரியர் இருதிருவடியையும் பொருந்
தப்பிடித்துக்கொள்ளவே-எ-று——உடல்பொருளாவி மூ
ன்றனையுந் தத்தங்கொடுத்தலாவது-உடலைத்தனதென்

தோன்றுதன்மாணித்தலின்றி யிருத்தல்-பொருள்களின்மே
லபற்றுதலின்றி யிருத்தல்-ஆவி-சிமென்றிவேறொன்றை
ச்சுட்டுதலின்றி யிருத்தலாம்—(அதற்குப் பிரமாணம்-பி
ரபீலை உயர்ந்தமெய்ஞ்ஞான நிட்டையாலனைத்தும் உ
ணர்ந்த மேலோர்க்குளமகிழ் வியக்குடலாவி பொருளை
யுட்சமர்ப்பித்தினி யிலாப்பிரமவானந்தம் - தடங்கிறை
றுடலபி மானத்தைநீக்கித் தனத்தின்மேல பற்றுதலின்
றிச் - சுயம்பிரகாசச்சிவமலமென்னைச் சுட்டிடாரவர்ப
தத்திப்பாம் - என்பதனுற்காண்க. அஎ

அ-னக- ஞானநேத்திரத்தைபருளி பிரமாநுபவமு
றையென்றதை மேலருளிச்செய்கின்றார்.

கலி - ஒழியப்புலக்கணுபவிடகப்பொருட்டே
ரியவுளஞானமாம்- விழியைக்கொடுத்துமோ
ழியெனமுப்பதப் பொருளும்வெளியாகவே

க - து. ஊனக்கண்ணென் றுளக்கண்ணளித்தபின்
ஞானப்பொருளநுபவமுறையென்றது.

இ-ள். (புலக்கணொழியவுளஞானமாம் விழியைக்கொ
டுத்து) புலன்களிலொன்றாகிய விழியாற் பார்க்கின்றதை
யொழித்து உள்ளேபிரகாசித்தறியும்பேரறிவாகிய ஞா
னநேத்திரத்தைக் கொடுத்தருளி (உபவிடகப் பொருட்
டெரிய முப்பதப்பொருளும் வெளியாகமொழியெனவே
உபதேசித்து அர்த்தந்தெரியும்படிக்கு திரிபதார்த்தமும்
பிரகாசமாகச் சொல்லென்று கேட்கவே-எ-று—அந்த
னமாசாரியநுபதேசித்ததும், இந்தமாணாக்கனேற்று
க்கொண்டதும், சம்பிரதாயமெனவறிக அ-வ

அ-னகை- மாணாக்கன் அவஸ்தாத்தரிசனஞ்செய்து
அநுபவமுறைக்கின்றதை மேலருளிச்செய்கிறார்.

றிடாவிடம் பரசுமுத்திபெனத் துணிந்தேன்) அறி
யாத இடத்தைப் பரசுமுத்திபாக தரித்தேன்-எ-று.
(இதன்பதசாரம்) நானேநானு பகண்டபரிபூரணமாஞ்
சமஸ்தமு முணர்வுற்று எவற்றிற்றும்பொதுவாகவிரு
ப்பதென்பார் சான்றென்றும் பூருவசஞ்சிதத்தோலிய
விஷயேந்திரிய ரூபமா யாசாமிய நீங்கினேனென்றவா
தனையான அஞ்ஞானமுங் கடந்த உணர்வென்பார் சா
க்கியமென்றுஞ் சிதாபாசத்துவம் அத்தமித்த கூடஸ்த
சைதன்னியமும் பிரமசைதன்னியமும் ஏகமானதென்
பார் இறந்திடமென்றும் பெத்தத்திசையிற் சிற்றுண
ர்வு முத்தித்திசையிற் பேறறிவுமாகியதென்பார் - நா
னிருந்தமையுந் தோன்றிடாவிடமென்றும் இரண்டாம்
பாழென்பார் - பரசுமுத்தியென்றுங்கூறினர். ;(இதற்
குக்காரணம்) சொக்கிமுன்வினையற நுகர்வுறுவினை
ய நோக்குமித்தியங்களின் போக்கறுத்தகத்தே நான்
கியவாதனை தன்னையுந்தவிர்த்துத்-தமத்தினைக் கடத்து
ணர் சாக்கியதாக்கி-சாக்கிசான்றுமத் தமித்து நின்
றொளிருந் தற்சுருபமுமுப சமித்துணிலொன்றத்-தூக்
கினனே சுருபானந்தச் சுடரே சுந்தரனேபள்ளியெழு
ந்தருளாயே - என்றும் இதமகமறவிரு வினவமென்ற
ருளி - எழில்பரசுமுத்திகார ணதியற்றதுவாம்-அதீத
மதிது வஜஹர்லட்சணையதனுல் ஆசறுசொல்லுறு பா
ழிரண்டாம்பாழ்-பொதுவதுபுகவதுபோக்கடமன்றிப்
போதமுமழுங்குமவ்வியாகிருதமிறுகல்-பதிபுடன் சதா
சிவ பராசக்தியருளப் பரிபூரணனே பள்ளியெழுந்தரு
ளாயே என்பதனுற்கா ண்க. ௯௯

அ-கை. மேல் பரதுரியத்தை உரைக்கின்றார்.

கவி. மரித்ததென்றுணர்ந்துரைத்ததும்
மரித்திடந்தனிலே
தெரித்தபோதமேயதுபர
துரியமாய்த்தெளிந்தேன்.

க-து. ஊன்றிய நனவுட னுற்றது மூன்றும்
தோன்றிடாவிடம் பரதுரியமென்றுரைத்தது

இ-ள். "மரித்ததென்றுணர்ந்துரைத்ததும்" இறந்த தென்றறிந்து வசனிக்கப்பட்டதும் "மரித்திடந்தனிலே" இறந்தவிடமாகிய விடத்திலேனின்று "தெரித்த போதமே" அறிவித்த அறிவாகின்றதே "அதுபரதுரியமாய்த் தெளிந்தேன்" தத்பதமாகிய துரியமென்றறிந்தேன்-எ-று. (இதன்தாத்பரியம்) தற்போத இழப்பிலேநின்றவுணர்வு மதன்வாசனையாகிய வாக்குமாயையுமாண்டு மிறந்துளவிடமானந்தாதீதமென்பார், மரித்ததென்றுணர்ந்துவாத்தது மரித்திடந்தனிலேயென்றும் - அஃதினிலவசமுற்று அதுதானெனப்படு நானதுவென்பது மற்றது தானேதானுவதென்பார் தெரிந்தபோதமேயதுபரதுரியமென்றுங்கூறினார். எ-று.

அ-கை. மேல்குருசாக்கிரத்தையுரைக்கின்றார்.

கவி. இறையெனும்பொருட்டுரியமே
என்னையாண்டவனே
மறையினந்தகற்பதப்பொரு
ளானவெனமகிழ்ந்தேன்.

க-து. மூப்பகமுடிவினில் மூலகாரணமதாம்,
நற்பொருளானவென நாடியுரைத்தது.

இ-ள். "இறையெனும்பொருட்டுரியமே" யாதுக் கு மேலென்று சொல்லும் பொருளாகிய பிரமமே எ

னையாண்டவனே அடியேனை, அடிமை காண்டாண்ட ருளும்பொருட்டு திருமேனிகொண்டெழுந்தருளுங்கு ருநாத மறையினந்தற்பதப் பொருளானென மதித் தேன் வேதமுடிவாகிய சுத்தப்பார்த்தமே குருசாக்ஷி ரமாக நிச்சயித்தறிந்தேன்-எ-று. குருவே பிரமம்பிர மமே குருவென்பார் இறையெனும் பொருட்டுரியமே யென்னையாண்டவனேயென்றுகூறினார். 'உதாரணம், அருவமுமுருவமுமாகியபொருளே அதீதமென்றருளி ய வழித்தது வறிந்த-பொருளுணர்வதுப்ரம் விசிட்ட வாக்கியவதால்-பொருவில்சிந்சொலிதைதற்பதப்பொ ருளதுவாம் இருநிலனெனமுத லருளியபரிசே-எழிலி ருபூரணத் தியல்குருநனவில்-பரமுரவெனறெழுபவமு றுத்தருளப் பரிபூரணனே பள்ளியெழுந்தருளாயே எ ன்பதனுற்காண்க. கஅ

அ ஐக. மேல்குருஸ்வபரத்தையுரைக்கின்றார்.

கவி. பண்டைவிச்சுவவாதனைப்
பழுதுபோய்முழுதும்
கண்டகண்ணோதாயாய்வக்
கனவதுங்கண்டேன்.

க - சூ. தாமுயிர்யாவையுந் தானாய்நிறைபரம்
பிரகாசங்குரு கனவென்றுரைத்தது.

இ-ள். "பண்டை" பூருவந்தொற்றுகின்ற விச்சுவ ம் உலகாதிகளினது "வாதனை" துன்பமாகின்ற பழு துபோய் குற்றநீங்கி 'முழுதும்' அசேஷமும் கண்ட ஆடியைப்போலறிவுற்று நின்ற கண்ணேறபாய இட மேயாகின்ற 'கனவதுங்கண்டேன்' குருஸ்வாபநத்தை

யுந் தரிசித்தேன்-எ-று. காரணோபாதிகமூன்றுவிளங் கானின்ற தத்வரூபமே விஸ்வக்கிராசம் பண்ணிய தென்பார் பண்டைவிச்சுவாதனைப் பழுதுபோயெ ன்றும் காரிய காரணவுபாதி அசேஷமும் அறிகின்ற அறிவு ஆடியிற் காட்சிபோலென்பார் - முழுதுங்கண் ட கண்ணேதயாயவக் கனவென்றுங்கூறினார் உதார ணம் மலைமுகுருபக்கனவின்மருவு மாசறுமாணவ சாத்திகமதனால் உலகமே யிருந்தன்மாத்திரமா உணர்ந்ததுவே பிரசாபத்திய மென்றருளி - நிலவியப ரமதாயவைமுழுதும் நிகழ்ந்ததின்றெற்கென நெடு யவர்முதலே பலவுலகுண்டது மிதுவெனவருளப்பரி பூரணனே பள்ளியெழுந்தருளாயே என்பதனாற் கா ண்க. கூக

அ ஙை. மேல்குருசுழுப்தியை உரைக்கின்றார்.

கவி. காட்சியாவையுங்கண்ணதா
வக்கணுங்கரைந்து
மாட்சியாகியவகோசர
முறக்கமாய்மதித்தேன்,

க - து. கட்டமிலாதறி மண்ணிற லென்றும்
சட்டிலாவதுவே சுழுப்தியென்றுரைத்தது.

இ-ள். கண்ணதா பார்வைக்குறியதாக காட்சி யாவையும் கண்டறிகின்றதாகிய அசேஷமும் அக்கணுங் கரைந்து அந்தப்பாவையுங் கரைவுற்று மாட்சியாகி யவகோசரம் மனவாக்குகளாலறியவொண்ணாதபெரு மையை உறக்கமாய்மதித்தேன் ஆதியந்தருளியமாச தரிசித்தேன்-எ-று. தேவதத்தனை நோக்கி அவனைய் வனைப் அக்காலமிக்காலம் நோக்கிக்கண்டதென்பார்

அனைத்துமாயனைத்து மிலதாயிருக்கின்றதன்னைத்தன்னிடத்துத் தானேயிருந்துவிளக்கி அரிய தவப்பயனாற் பெறும்பேறு தானாய் நிறைந்ததென்பார், அருந்தவாவென்றும் சுருதிமுடிவுமறிதற்கரிய முப்பாழுங்கடந்த சூன்யமென்பார் மறைக்கந்தமா மகோசரந்திலென்றும் - துரியசம்பூரணமெனவுணர்ந்த ஸ்வாநுபூதியை விழியாலறிவித்ததென்பார் நீயிருந்தவாறறிவித்தவா றென்னனமிசைக்கே னென்றுங்கூறினர். இவையனைத்துஞ் சற்குருவருளாலுணர்க. ௭௧

கவி. எம்பிரானிடந்தொறு
மிடந்தொறுமதுவதுவாய்
தம்பிரானடஞ்செயுமவகை
சாற்றுமாறறியேன்.

௯ - து. எவ்விடம்பார்க்கினு மவ்விடமதுவாய்ச்
செவ்வியோனின்றது செப்பரிதென்றது.

இ-ள். 'தம்பிரான், எப்பொருட்குமேலாகிய கடவுளே 'எம்பிரான், எமதிறைவனே 'இடந்தொறுமிடந்தொறும, எவ்வெவ்விடங்களை நோக்கினும் 'அதுவதுவாய், அவ்வவ்விடங்களுக்குத்தகுந்த அருவதுவாய் 'நடஞ்செயும்வகை, தேவரீர்நடக்கின்ற கூறுபாட்டினை சாற்றுமாறறியேன் உரைப்பதற்கு வகையறிகின்றிலேன் எ-று தனதுடல் பொருளாவி மூன்றையுங் கையேற்றடிமைகொண் டிரட்சிக்குந்தேசிகோத்தமனே யென்பார், எம்பிரானென்றும் - ஜீவசாக்ராதி குருதுரியாந்தமென்பார், இடந்தொறு மிடந்தொறுமென்றும், நனவாதி துரியாந்தங்களில் அதற்கதற்குரிய வியல்பாய் நின்றவென்பார் அதுவதுவா

யென்றும் பிரமாணிலக்கம்பார்த்துத் தானும் விளங்குவ தை யுரைப்பது வாக்மான சகோசரமென்பார் நட க்கெசயும் வகைசாற்று மாற்றியேனென்றும் கூறினர்

அ தை, மேல்விடனது விண்ணப்பம் அருளிச் செய்கின்றார்.

கலி. ஆவியேயடியேன்செய்கை
மாறுளவெனினும்
பாவியேனதுதானுமுன்
னுடையதாம்பண்டே.

க - து. அடிமை கைமாறினுக் காவியே டெல்லாம்
உடையநீயெனக் கொன்றுண்டோ வென்றது

இ - ள். ஆவியே உயிருக்குயிராய் நின்ற ஐயனே அடியேன் செய்கை மாறுள வெனினும் அடிமை செய்யவேண்டிய கைமாறுண்டாயிருக்கின்ற தென்று னும் பாவியேன் வேறுகப் பாவிக்கின்றிலேன் அதுதா னுமுன்னுடைய தாம்பண்டே யான்பாவிக்கின்ற அப் பொருள்களும் முன்பே அத்தேவரீருக்குரிய பொரு ளாம்-எ று. சாரம்-ஆசாரியர்பிறவாநெறியை அநுக்கி ரகஞ்செய்ததற்குசிஷன்குருதெக்ஷிணைசெய்வதியல்பெ ன்றார் அடியேன்செய்கைமாறுளவெனினுமென்றும் உ டல்பொருளாவிமூன்றும் அடிமைகொண்டவன்றேகை க்கொண்டபின்பு தனக்கோர்சுதந்தரமின்றென்பார்பா வியேனதுதானு முன்னுடைய தாம்பண்டே யென்று கூறினர். ௩௯

கலி. அவல்செய்தனதாக்கை
யுள்ளவுநின்னடியார்க்
கேவல்செய்யவேயன்றி
மற்றொன்றுமாறறியேன்.

க - து. நின்னடியார்க் கேவல் செய்ப கல்லது
மன்னுனைகமாறுவே றிலையென் றுரைத்தது.

இ - ள். (எனதாக்கை யுள்ளவு நின்னடியார்க் கேவல்செய்து அடியேனது தேகமுள்ளளவுந் தேவரீர் திருவடியடியாரிடத்திலன்புதாங்கி (ஏவல்செய்லதேயன்றிமற்றொன்றுமாறறியேன் பணிவிடை செய்கின்ற தேயல்லது வேறொன்றுங் கைமாறுசெய்ய அறியேன் எ - று இதற்குதாரணம் (சூதகீதை) பரம்பொருடானுந் தேகிகர்தமக்குப்பணிசெய்வோர பணிசெய்யுமோயாகி அரன் திருமால் மற்றுளதெய்வந்தனினும் அதிகமாந் தெய்வமிங்கென்றுந் தெரிந்தவன் மகிமை செப்பொணு தவன்றுட்பணிசெய்வோர்பதங்களென்சிரகத்தில்திருந்தவைத்துவப்பேனையலொருதெய்வமுண்டெனச்சிந்தனை செய்யேன் என்பதனுற்காண்க.

கள. இறவிலெப்பதமும்பெற
வேண்டிலேனென்றும்
பிறவிவேண்டுவனின்றிருப்
பணிசெய்பெறினே.

க - து. எற்பவமாயினுற் குற்பமுறுமெனின்
நிற்பணிபெப்பவுநேடுவனென்றது.

இ - ள். (பிறவி சநநத்தையும் (இறவி லெப்பதமும் பெறவேண்டிலேன்) லயமில்லாத எத்தன்மைப் பட்டபதத்தையும் பெற்றுக் கொள்ள விச்சித்து வேண்டுகின்றிலேன் (பிறவி பெறின்) அதவாசநநம் வருமாகில் (என்றுநின்றிருப்பணிசெய்துகொண்டிருக்கத்தக்கதாக வேண்டுவன் - எ - று. பிறவியென்றதை இரண்டிடத்துங் கூட்டுக,

அ - கை, மேல்மாணாக்கன் ஆராமையை அருளி ச்செய்கின்றார்

கவி. என்றுபலகால்விழுமெழுந்தொரு
மழும்புரிவதென்னையினியான்
றின்றுபலவாகவுரைசெய்யுமவ
னன்பிறேடுநெஞ்சுருகியே.

க - து. அன்பினாலுருகுமெய்யானந்தமேலிடத்
துன்பிலிமத்தர்போற் றொழுதனனென்றது

இ - ள். (அவனவன்பின்றேடுநெஞ்சுருகி) அந்தச்ச சிவர்ணன் அன்பிறேடும் அனலைக்கண்டநவநீதம்போ லமனதிளகி(பலகால்விழுமெழுந்தொழும்) அனேகந்தி ரமாகவணங்கிவிழுவான் எழுந்துநிற்பான் திரும்பவும் வந்தனஞ்செய்வான் (பாணிப்புரிவதென்னை யென்ற ழும்) அடியேனினிச்செய்யத்தக்கவையென்னை யிருக்கி ன்றதென்று கண்ணீரோடும்படி அழுதுபுலம்புவான் நின்றுபலவாகவுரைசெய்யும் அஞ்சலிஅத்தனாகநின்று கொண்டு அநேகவிதமாகத் தோத்திரஞ் செய்வான் ளக

எ - று.

அ - கை. மேல் குருகடாக்ஷவல்லபம் புகழ்ந்த ருளிச்செய்கின்றார்.

கவி. எட்டிலறிவின்றியிறைதன்னிலறி
வின்றியிவ்வுடம்பினுடனே
விட்டினுறைவானையினிவீடுபெறு
மென்பதுவிலம்புகிலனே.

க - து. பிறவாநெறிபெருமைசெய்சிடன்
இறவாப்பெருமையையியம்பொணுதென்றது

இ - ள். (எட்டிலறிவின்றி) சாஸ்திரவாசனையு மற்று (இறைதன்னிலறிவின்றி) ஈஸ்வரவாசனையுமற்று (இவ்

வுடம்பினுடனே) இந்தப்பஞ்சபூதகாரியமாகியதேகத்தோடுதானே [வீட்டினுறைவான்றனை நிரதிசயானந்த மோக்ஷவீட்டில் இரண்டறக்கலந்திருக்குஞ் சசிவர்ண னை (இனிவீடுபெறுமென்பது) தேகாந்தத்தில்மோக்ஷத்தைப்பெறுவா னென்பதை(விளம்புகிலன்) அளவுபடுத்திச்சொல்லமாட்டேன்-எ-று. ௱௭

அ-கை,சசிவர்ணன் பிதுர்க்களடைந்த நற்கதியைக் கூறுகின்றார்,

கலி. வஞ்சவலியானரகின்வாழ்பிதிர்கள்
பாழ்படுவதாகவருளின்
விஞ்சைவலியாலடையவேறினர்
சுராதிபர்கண்மேலுலகமே.

க = து,நரகம்விட்டிவன் முன்னோர்நரகவாழ்வுற்றனை
பிரமஞானத்திற்பெருமையாலென்றது.

இ-ள்.(வஞ்சவலியா னரகின்வாழ் பிதிர்கள்)கொடுமையினது வலிமையினால் நரகத்தில்வீழ்ந்து கிடந்தவிவன்குலத்துப் பிதிர்களனைவரும் (அருளின் விஞ்சைவலியால் பாழ்படுவதாக) அருள்விளங்கிய பரஞானத்தின் வலிமையினால் நரகம் பாழடைவதாகும்படி (அனைவருடையவேறினர்) சுராதிபர்கள்மேலுலகமே) எல்லவருமீநரகக்காயிலேறி தேவர்கட்குரிய சுவர்க்கலோகத்திருந்துவாழ்கின்றனர் எ-று. ௱அ

அ-கை மேல் சசிவர்ணன் பெருமையை அருளிச்செய்கின்றார்.

கலி தேவருமனித்தருமிவன்றெழில்வியந்
துரைசெயத்தகுவதோ
மூவரும்விளம்பமுடியாதிவன்
தேவல்செயமுந்துறுவரே.

க - து. பொருந்திவன்குரு பணிபுகழ்ந்து தேவர்கண ரர்திருத்துமூர்களுரைசெயவரிதென்றது.

இ - ள். (இவன்மொழியில் வியந்து மூவரும் விளம்ப முடியாது) சிவர்ணன் குருபணிவிடைத் தொழிலின தருமையை அதிசயித்து மும்மூர்த்திகளாலுஞ் சொல்லமுடியாது தேவருமனித்தருமுரைசெயத் தகுவதோ தேவர்களாலுமனிதர்களாலும்வியந்து சொல்லமுடியுமா இவனதேவல்; செயமுந்துறுவரே சிவர்ணனுக்கு பணிவிடை தாங்கள் செய்வதற்குஎனக்குமுந்தவென க்குமுந்தவென்று வந்துபொருந்துவார்கள் எ - று. ரசுக

அதை, மேல் ஞானவானது பெருமையை அருளிச்செய்கின்றார்,

கவி. ஞானியைநான்சுரனெனுமொழிக
ஞாலமுயநாதனருளால்
மேனியதுகொண்டுதனைநல்கவரு
மென்றறையுமவேதமுடிவே.

க - து. நான்சுரன்ஞானிரவெனென்பதுநன்றல
பிரமமேஞானியம் பேதமென்றெனபது.

இ - ள். (ஞானியைநான் சுரனெனுமொழிக) பரஞானிகளை மனிதனென்றுந் தேவனென்றுஞ்சொல்லுகின்ற சொற்களைநீக்குக் - அஃதேதெனில்ஞாலமுயநாதனருளால் உலகங்கடத்தேறும்பொருட்டு (பரமே தமது காருண்யத்தினாலே) மேனியதுகொண்டுதனைநல்கவருமென்று (மானிடவுருவமாகத் திருமேனிகொண்டு தம்மைக்கெடுத்தருளவருமென்று வேதமுடிவறையுமவேதாந்தங்களெல்லாமவசனிக்கும் எ - று. (இதற்குதார

